R330 No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு










மலர்: 2 சென்னை 30—7—1978 ஞாயிறு நிர்வாக ஆசிரியர்: ஏ. கே. வில்வம் எம்.எல்.சி, வெளியூர் 31—7—1978 திங்கள் இதழ்: 281

### இந்திராவைக் கொல்ல சதி செய்த குற்றவாளிகள் ஊர்வல மர்மம்:

# கோர்ட்டை அவமதிக்கும் "சட்டநாதர்" சண்முகம்

முக்கியமான வழக்குகள் நடக்கும் போது மக்களும் பத்திரிகைகளும் அதில் அக்கறை காட்டுவது இயற்கை.

அரசியல் தொடர்பு உள்ளவர்கள் நீதிமன்றங்களுக்கு வரும்போது அந்தந்தக் கட்சியைச்சேர்ந்தவர்கள் நீதிமன்றங்களுக்குவருவது உண்டு, வரவழைக்கப்படுவதும் உண்டு,

நீதிபதிகள் அமர்ந்து தீர்ப்புக் கூறுகிற நீதிமன்ற மண்டபத்தை முற்றுகையிடுவதோ- 'பார், பார். இத்தனைபேரை திரட்டிஇருக்கிறோம்' என்று நீதிபதியை மிரட்டுவதோ-சாட்சிகளை பயமுறுத்துவதோ நீதிதேவதையின் கழுத்தை நெரிக்கச் செய்யும் முயற்சி என்பதில் யாருக்கும் சந்தேகம் வேண்டியதில்லை.

தங்களின் விருப்பத்துக்கு ஏற்ப தீர்ப்பு வழங்கவில்லை என்பதால் நீதிபதிகள் கருணாநிதி காலத்தில் மிரட்டப்பட்டார்கள், மாற்றப்பட்டார்கள் என்பது மறக்கக்கூடியதல்ல.

திருப்பூர் நீதிமன்றத்தில் புரட்சித்தலைவர் மீது வழக்கு தொடரப்பட்டது. அந்த வழக்கில் புரட்சித்தலைவருக்கு எதிராக தீர்ப்பு வழங்குமாறு நீதிபதிக்கு எந்தெந்த வகையில் எல்லாம் சேதிகள் அனுப்பப்பட்டன!

ஆனால் புரட்சித்தலைவர் மீதுள்ள குற்றச்சாட்டு உண்மையல்ல என்று திருப்பூர் நீதிமன்றம் தீர்ப்புக்கூறியது.

அதற்காக அந்த தீர்ப்பை எழுதிய நீதிபதி பல்வேறு இடங்களுக்கு மாற்றப்பட்ட கதையை நாடு அறியும்!

திருப்பூர் நீதிமன்றத்துக்கு புரட்சித்தலைவர் வந்தபோதும், தஞ்சை நீதி மன்றத்துக்கு புரட்சித்தலைவர் வந்தபோதும் கோர்ட் வாசல் முன் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடி நின்றார்கள்.

ஆனால் மக்கள் யாரும் நீதி மன்ற மண்டபதிற்கு அருகே அனுமதிக்கப்பட்டது கிடையாது.

திருப்பூரில் கோர்ட்டைச்சுற்றிலும், தஞ்சையில் கோர்ட்டைச் சுற்றிலும், பலத்த போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டு பொதுமக்களோ கழகத் தோழர்களோ யாரும் நீதிமன்றத்திற்கு உள்ளே அனுமதிக்கப்படாமல் தடுக்கப்பட்டனர்.

இது கருணாநிதியினுடைய உத்தரவின் மீதே நடைபெற்ற காரியம் ஆகும்.

அப்போதெல்லாம் 'நீதிமன்றத்துக்கு முன்னால் திரளுங்கள்! புரட்சித்தலைவர் மீது வழக்கு விசாரணையாம்' என்று அனைத்திந்திய அண்ணா தி.மு.க. தலைமைக்கழகமோ அல்லது புரட்சித்தலைவர் சார்பில் ஆஜராகும் வழக்கறிஞர்களோ அறிக்கை விட்டதில்லை.

ஆனால் இப்போது ஒரு புதிய முறையில் நீதிமன்றத்தை மிரட்டும் முயற்சியை தி.மு.க. தொடங்கியிருக்கிறது.

எந்த நீதிபதி ஆனாலும் தன் முன் எடுத்து வைக்கப்படும் வழக்கை அதற்கான ஆதாரங்களை- இருதரப்பு வாதங்களை-பரிசீலனை செய்து சட்டத்தின் விதிகளுக்கு உட்பட்டு தீர்ப்பு அளிக்கிறார்.

குற்றம் சாட்டப்பட்டவருக்கு ஆதரவாக எத்தனை பேர் கோர்ட்டில் திரளுகிறார்கள் என்பதை வைத்து எந்த நீதிமன்றத்திலும் தீர்ப்பு கூறப்படுவதில்லை.

ஒரு குறிப்பிட்ட நீதி மன்றத்தின் தீர்ப்பு எந்த தரப்பிற்காவது திருப்தி தரவில்லை என்றால் மேல் கோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொள்ள வழிவகை இருக்கிறது.

இந்நிலையில் நீதிபதிகள் சரியாக தீர்ப்பு வழங்கமாட்டார்கள். ஆகவே நீதிமன்றங்களுக்குமுன் பல்லாயிரக்கணக்கில் திரளுங்கள் என்று கூறுவது நீதித்துறையை- நீதிபதிகளை அவமதிப்பதோடு மட்டுமின்றி நீதிபதிகளை மிரட்டுவதாகவே பொருள்படும்!

**அதிலும் இத்தகைய வேலையில் ஒரு வக்கீலே ஈடுபடுவது விபரீதத்திலும் விபரீதம்!**

எஸ். எஸ். இராஜேந்திரனை கொலைசெய்ய முயற்சித்த வழக்கில் குற்றச்சாட்டு நிரூபிக்கப்படவில்லை என்று கூறி நீதிபதி தீர்ப்பு அளித்தார் அல்லவா?

அதற்குக் காரணம் கோர்ட்டுக்கு முன்னால் பல்லாயிரக் கணக்கான மக்கள் திரண்டதுதானும்.

ஆகவே இந்திராகாந்தியை கொலை செய்ய முயற்சித்த வழக்கில் கருணாநிதிக்கு சாதகமான தீர்ப்பு பெற வேண்டும் என்றால் பல்லாயிரக்கணக்கில் கோர்ட்டுக்கு முன்னால் திரள வேண்டும் என்று ஒரு வக்கீல் அழைப்பு விடுக்கிறார்!

**இப்படிப் பேசியவர் கருணாநிதியின் வக்கீல் பாளை சண்முகம்!**

அவரது பேச்சு முரசொலியிலேயே

(2-ம் பக்கம் பார்க்க)

### தஞ்சையில் மது ஒழிப்பு மாநாடு:

# பிருமாண்ட ஊர்வலம்



**தஞ்சை, ஜூலை 30- தஞ்சை மேற்கு மாவட்ட மது ஒழிப்பு மாநாட்டை ஒட்டி தஞ்சையில் இன்று காலையில் லட்சக்கணக்கானோர் கலந்துகொண்டபிரும்மாண்டமான ஊர்வலம் நடைபெற்றது.**

தஞ்சை மேற்குமாவட்ட மது ஒழிப்பு மாநாடு இன்றுதஞ்சையில் நடைபெறுகிறது.

இதனை யொட்டி இன்று காலையில் தஞ்சை புனித அந்தோணியார்செகண்டரி உயர்நிலைப் பள்ளியிலிருந்து மாபெரும்ஊர்வலம் ஒன்று புறப்பட்டது.

ஊர்வலத்தின் முன்னே அலங்கரிக்கப்பட்ட யானை செல்ல லட்சக் கணக்கானோர் அதனைத்தொடர்ந்து சென்றனர்.

மேளதாள வாத்தியங்கள், உறுமி மேளம், கரக ஆட்டம், காவடி ஆட்டம் சிலம்பாட்டம், பொய்க்கால் குதிரை ஆட்டம் ஆகியவை தொடர்ந்து சென்றன.

ஊர்வலத்தி னிடையே மதுவின் கொடுமையைச் சித்தரிக்கும் அலங்கார வண்டிகள் பல சென்றன. ஊர்வலத்தில் பொது மக்கள் திரளாகக் கலந்து கொண்டனர்.

ஊர்வலம் சென்ற வழி நெடுகிலும் சாலையின் இருமருங்கிலும் ஆடவரும் பெண்டிரும் திரண்டுநின்று ஊர்வலத்தைப் பார்த்தனர்.

#### எஸ்.டி.எஸ்.- ம.பொ.சி

பேரறிஞர் அண்ணாவின் சிலை அருகே உயரமான மேடை ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அந்த மேடையிலிருந்தபடி அமைச்சர் எஸ். டி. எஸ். மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர் ம. பொ. சி, மந்தா கினி கிருஷ்ணமூர்த்தி, எஸ்.கே. சுப்பிரமணியம் நீதிபதி சதாசிவம், போலீஸ் டி. ஐ.ஜி தேவாரம், மாவட்ட கலெக்டர் முருகராஜ், மாவட்ட போலீஸ் அதிகாரி ராஜகோபால் ஆகியோர் ஊர்வலத்தைப் பார்த்தனர். மடைதிறந்த வெள்ளம்போல் வந்த இந்த மாபெரும் ஊர்வலம் ஒருஇடத்தைக்கடந்து செல்ல இரண்டரை மணி நேரம் பிடித்தது.

#### திலகர் திடலில்...

ஊர்வலத்தை ஒரத்தநாடு திட்டத் தலைவர் என். ராமசாமி துவக்கி வைத்தார்.

மாநாட்டு ஏற்பாடுகளை பட்டுக்கோட்டை பாப்பையன், புலவர் சித்திரவேலன், புலவர் சங்கரலிங்கம், புலவர் ராமசாமி ஆகியோர் சிறப்பாகச் செய்திருந்தனர்.

ஊர்வலம் மாநாடு நடைபெறும் திலகர் திடலை அடைந்து கருத்தரங்கு துவங்கியது.

#### புரட்சித் தலைவர்

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் இன்றுமாலையில் மதுவிலக்கு மாநாட்டில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகிறார்.

### புதுவை அமைச்சர் மீது

# தற்காலிக ஆளுநர் உத்தரவு சரியல்ல: கண்டன பேரணி

**புதுவை, ஜூலை 30- புதுவை உள்துறை அமைச்சர் மீது விசாரணை நடத்தும்படி தற்காலிக ஆளுநர் உத்தரவிட்டது சரியல்ல என்று அதற்கு கண்டனம் தெரிவிக்கும் வகையில் புதுவையில் கழகத்தினர் மாபெரும் பேரணி ஒன்றை நடத்தி ஆளுநரிடம் மகஜர் கொடுத்தனர்.**

இந்தப் பிரச்சினையில் சட்டச்சிக்கல்கள் இருப்பதால் மத்திய உள்துறைக்கு அனுப்பி அதன்விளக்கத்தை திங்கட்கிழமையன்று தெரிவிக்கிறேன் என்று மகஜரை பெற்றுக்கொண்ட ஆளுநர் தெரிவித்தார்.



புதுவை மாநில உள்துறை அமைச்சர் டி.ராமச்சந்திரன், மற்றும் இரண்டு அதிகாரிகள்மீது விசாரணை நடத்தும்படி புதுவை மாநிலத்தில் தற்காலிக ஆளுநராக இருந்த பிரபுதாஸ் பட்வாரி உத்தரவிட்டார்.

இந்த உத்தரவு அரசியல் சட்ட ரீதியாகவோ, சட்ட ரீதியாகவோ செல்லத்தக்கதல்ல என்று புதுவை முதல்வர் கருத்து தெரிவித்தார்.

புதுவை மாநிலத்தின் தற்காலிக ஆளுநராக இருந்த பிரபுதாஸ் உத்தரவிட்ட இந்த விசாரணை உத்தரவு செல்லாது. சட்ட விரோதமானது என்று கண்டனம் தெரிவிக்கும் பேரணி ஒன்றை நடத்த புதுவை மாநில கழகம் முடிவு செய்தது.

அதன்படி நேற்று கழகத்தின் சார்பில் புதுவை மாநிலமே இதுவரை கண்டிராத வகையில்மாபெரும் பேரணி நடத்தப்பட்டது.

இந்த பேரணி நேற்று (சனிக்கிழமை) மாலை 4 மணிக்கு நெல்லித்தோப்பு அண்ணா நகரில் தொடங்கியது.

ஊர்வலத்தில் ஏராளமான கழகத் தொண்டர்களுடன் ஆயிரத்திற்கும் மேற்பட்ட சைக்கிள்கள், மற்றும் சைக்கிள்ரிக்ஷாக்கள் சாரிசாரியாக அணிவகுத்து வந்திருந்தன.

புதுவை மாநில கழகப் பொருளாளர் பி. கே. லோகநாதன், சட்டமன்ற உறுப்பினர்கள் என்.மணிமாறன், சூசைராஜ், பொன். வசல்வராஜ், மணியன் மற்றும் சிவா. லோகநாதன

(2ம் பக்கம் பார்க்க)

### மதுரை மாநகராட்சி வெற்றி:

# அமைச்சர்களை நேரில் கண்டு மதுரை முத்து நன்றி கூறினர்

**சென்னை, ஜூலை 30- மதுரை மாநகராட்சியின் வெற்றிவீரர் மதுரைமுத்து சென்னைக்கு வந்து அமைச்சர்களை சந்தித்து நன்றி தெரிவித்துக் கொண்டார்.**



மதுரை மாநகராட்சித் தேர்தலில் வெற்றி பெற்றபின் மதுரைமுத்து இன்று (ஞாயிறு) சென்னைக்கு வந்தார்.

கழக அவைத்தலைவர் நாவலர், நிதியமைச்சர் நாஞ்சிலார், செய்தி-சுற்றுலாத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து, தொழிலாளர் நல அமைச்சர் எஸ். ராகவானந்தம், போக்குவரத்து அமைச்சர் பொன்னையன் கூட்டுறவு அமைச்சர் கே.ஏ.கே.வையும் சந்தித்துமதுரைமுத்து நன்றி தெரிவித்துக்கொண்டார். முன்னதாக புரட்சிதலைவரின் இல்லத்திற்கு மதுரைமுத்துசென்று புரட்சித்தலைவரின் துணைவியார் ஜானகி அம்மையாரிடம் மலர்மாலையை அளித்தார். அவர் அந்த மாலையை அன்னை சத்யா அவர்களின் படத்திற்கு அணிவித்தார்.

### ரயில்வே ஊழியர் நிரந்தரம்

செங்கல்பட்டு, ஜூலை 30- "ரயில்வே உணவு சிற்றுண்டி விடுதிகளில் வேலை பார்க்கும் ஊழியர்கள் நிரந்தரமாக்கப்படுகிறார்கள்" என்று அமைச்சர் மதுதந்தவதே அறிவித்தார்.

நேற்று மாலை செங்கல்பட்டில் நடந்த ரயில்வே ஊழியர்கள் கூட்டத்தில் ரயில்வே அமைச்சர் மது தந்தவதே பேசியதாவது:

"1974ம் ஆண்டில் ரயில் ஊழியர்கள் வேலை நிறுத்தத்தில் கலந்துகொண்டதால் வேலை நீக்கப்பட்ட 16 ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஊழியர்கள் மீண்டும் இப்போது வேலையில் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளனர். வேலைநிறுத்தம் செய்த காலம் விடுமுறையாகக் கருதப்பட்டிருக்கிறது.

மேற்கண்டவாறு அமைச்சர் மதுதந்தவதேகூறினார்.

# விளையாட்டு வீரர் மீது மொரார்ஜி கடும் தாக்கு

புதுடெல்லி, ஜூலை 30- தேசிய விளையாட்டுப் போட்டிக்கான விளையாட்டு வீரர்கள் தேர்வு செய்யப்பட்ட முறைக்கு பிரதமர் தேசாய் கடும் கண்டனம் தெரிவித்தார்.

மெக்சிகோநகரத்தில்நடக்கும் பள்ளி மாணவர்களுக்கான உலக குத்துச் சண்டைப் போட்டியில் :பங்கேற்கும் இந்தியஅணிவீரர்கள் இன்று தேசாயைச் சந்தித்தனர்.

அவர்களிடம் தேசாய் கூறியதாவது:-

உலகப் போட்டிகளில் கலந்து கொள்வதற்காக இந்திய வீரர்கள் தேர்வு செய்யப்படும் முறை குதிரை வர்த்தகம் போலவும், கோட்டமுறை போலவும் இருக்கிறது. இதனால் சிறந்த விளையாட்டுவீரர்களின் திறமை வீணடிக்கப்படுகிறது. அவர்கள் தேர்ந்தெடுக்கப்படாமல் புறக்கணிக்கப்படுகிறார்கள். இந்த நிலை உடனடியாக களைந்தெறியப்படவேண்டும்.

காமன் வெல்த் போட்டியிலும், உலக டித்துக்குச் சண்டை போட்டியிலும், இந்திய வீரர்கள் தேர்வு விஷயத்தில் அரசு மிகவும் தாராள மனப்பான்மையோடு நடந்து கொண்டதை யாரும் தவறாகக் கருதிடக்கூடாது. போட்டிகளின் முடிவை அரசு கூர்ந்து கவனித்துக்கொண்டு தானிருக்கிறது. எனவே இனிமேலாவது விளையாட்டுக் கழகத்தினர் தனது கொள்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டும்.

சில விளையாட்டுச் சங்கங்கள், சில வீரர்கள் ஆகியோர் கொண்டுள்ள அலட்சிய உணர்வையும் பொறுமைப் போக்கையும் கைவிடவேண்டும்.

இவ்வாறு பிரதமர் தேசாய் கூறினார்.

# தென்னக முதல்வர்களின் உரிமைக்குரல்

பிளிட்ஸ் சிறப்பு கட்டுரை

எல்லா மாநிலங்களுமே நிதி நெருக்கடியால் அவதிப்படுகின்றன. அரசியல் நெருக்கடியைக் காட்டிலும், பொருளாதார நெருக்கடிதான் எல்லா மாநிலங்களையும் வாட்டிவதைக்கிறது.

எல்லா தரப்பட்ட பொருளாதாரச் சிக்கல்களுக்கும் மத்திய அரசையே எதிர்நோக்கி காலங்கள்ள வேண்டிய நிர்ப்பந்தமான சூழ்நிலை மாநிலங்களுக்குத் தோன்றிவிட்டது.

1979ம் ஆண்டின் இறுதியில் எல்லா மாநிலங்களின் மொத்தப் பற்றுக்குறை ரூபாய் 762 கோடியாக இருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. 1951.52 ஆம் ஆண்டில் 21 கோடி ரூபாயாக மட்டுமே இருந்த மாநிலங்களின் கடன்தொகை 1976-77ம் ஆண்டில் ஒரு ஆயிரத்து 615 கோடி ரூபாயாக உயர்ந்திருப்பதையும் காணமுடிகிறது.

பல்வேறு மாநிலங்களின் மொத்த வருமானத்தில் 73சதவீதம் இதுபோன்ற கடன்களைத் திருப்பிச் செலுத்துவதே சரியாக இருக்கிறது. காஷ்மீர், பீகார், அசாம், ஒரிசா- ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் வருமானத்தைக் காட்டிலும் கடன் உயர்ந்து விட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

இதன் காரணமாக எல்லா மாநிலங்களும் மத்திய அரசின் கொத்தடிமைகளாக மாற்றப்பட்டுவிட்டன. மத்திய அரசு தகுந்த நேரத்தில் உதவி செய்யாமல் போய்விடுமேயானல் பல மாநிலங்கள் ஒரே இரவில் திவாலாகி விடக் கூடிய அபாயகாமான சூழ்நிலை நிலவுகிறது.

ஏற்கனவே இந்த கொத்தடிமை முறைக்கு மேற்கு வங்காளம் உள்பட பல மாநிலங்கள் தங்களது ஆழ்ந்த கவலையைத் தெரிவித்துள்ளன.

தென்னக முதல்வர்களும் மாநிலங்களுக்கு அதிக நிதி அதிகாரம் வேண்டும் என குரல் எழுப்பி இருக்கிறார்கள்.

ஆனல் இவர்களது கோரிக்கைகள் செவிடன் காதில் ஊதிய சஙகாகத்தான் இருந்து வந்திருக்கிறது. வர்த்தகத்துக்கும் தொழில்துறைக்கும் தலைமைப்பீடமாக விளங்கும் மத்தியஅரசு, எல்லாதரப்பட்ட தேசிய வருமானத்தையும் தன்வசப் படுத்திக்கொள்ள விழைவதோடு மட்டுமல்லாமல் வருமானத்தை பங்கிட்டுத் தருவதிலும் 'யுக்தி' என்ற பெயரில் அநீதியை இழைத்து வருகிறது.

உண்மையில் இந்தப் பிரச்சினையை மத்திய நிதியமைச்சரும் உணர்ந்து கொள்ள மறுக்கிருர். வட்டிக்கடை வியாபாரிபோல அவர் பேசி வருகிறார். தனது சுய லாபத்துக்காக எல்லா உணவு தானியங்களையும் வைத்துக்கொண்ட ஒருவன், உணவு கிடைக்காமல் பட்டினியால் அவதிப்படும் பொதுமக்களுக்கும் தனக்கும் எவ்வித வியாபார தொடர்பும் இல்லை என பிடிவாதம் பிடிப்பதைப் போல அவர் நடந்து கொள்கிறர்.

ஆகவேதான் மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் இடையே வளர்ந்து வரும் கருத்து மோதல்கள் தவிர்க்க முடியாதவையாகி விட்டன.

அதிகாரவர்க்கம், காவல்துறை, ராணுவம் ஆகிய துறைகளுக்கு வளர்ந்துவரும் செலவுகள், நிதி தேவையை மேலும் அதிகப்படுத்தி இருக்கிறது. எனவே ஆறுவது ஐந்தாண்டுத்திட்டத்தில் மேலும் அதிக நிதி ஆதாரங்களைப் பெருக்கிக் கொள்ள பல வழிகளைக் கையாள வேண்டியதிருக்கிறது.

இதனல் மாநிலங்களும், மத்திய அரசும் விதிப்பை உயர்த்துகின்றன. பொது மக்கள்தான் இதனல் பெரும் பாதிப்புக்குள்ளாகி அவதிப்படுகிருர்கள்.

**மாநிலங்களுக்கு கூடுதலாக நிதி அதிகாரம் வழங்கப்பட வேண்டும் என்ற தென் மாநில முதல்வர்களின் கோரிக்கையை மத்திய அரசு ஏற்றுச் செயல்பட வேண்டியதன் அவசியத்தை "பிளிட்ஸ்" ஏடு வலியுறுத்தியிருக்கிறது "தென்மாநிலங்களின் பெருகி வரும் உணர்ச்சிக் கொந்தளிப்பு" என்ற தலைப்பில் "பிளிட்ஸ்" வெளியிட்டுள்ள சிறப்புக்கட்டுரை**

தேசிய வருவாயைப் பிரித்து மாநிலங்களுக்கு வழங்குவதில் மத்திய அரசு 'காலனி ஆதிக்க' முறைவை முற்றிலும் ஒழித்தாக வேண்டும் மத்திய அரசு இதை முதலில் செய்தாக வேண்டும் நிதிக்கொள்கையில் மட்டுமல்ல பொருளாதார உணவுதானிய விலை கொள்கையிலும் மாநிலத்துக்கு மாநிலம் மத்திய அரசு வேறுபாடு காட்டி விளையாடி வருகிறது

மேற்குவங்கம் மற்றும் தென்னட்டு மாநிலங்களில் சர்க்கரை, நெல் ஆகியவற்றுக்கு விலை நிர்ணயித்திருப்பதிலும் மத்திய அரசு தனது காலனி ஆதிக்க உணர்வை வெளிப்படுத்தியிருக்கிறது.

ஆந்திர பிரதேசத்தில் லெவி சர்க்கரையின் விலை மற்ற மாநிலங்களைக்காட்டிலும் குறைவு என்று தொழில் மற்றும் சர்க்கரை துறையின் ஆந்திர அமைச்சர் தெரிவித்திருக்கிறர். அவர் ஆந்திர சட்டமன்றத்தில் பேசும்போது ஆந்திராவில் லெவி சர்க்கரைக்கு நல்ல விலை தர மத்திய அரசு எவ்வித முயற்சியும் மேற்கொள்ள மறுக்கிறது என்று தெரிவித்துள்ளார். இதனல் கரும்பு விவசாயிகள் பட்டினி கிடந்து சாவதைத் தவிர வேறு வழியில்லை என்றும் அவர் வேதனையோடு கூறியிருக்கிருர்.

சர்க்கரைத் தொழிலில் திறமைமிக்க தமிழ்நாடு, ஆந்திரம், மராட்டியம் ஆகிய மாநிலங்களில் சர்க்கரைக்கு குறைந்த விலை தரப்படுகிற நேரத்தில், சர்க்கரை தொழிலில் திறமையேயில்லாத உத்தர பிரதேச மாநிலம் மட்டும் சர்க்கரைக்கு அதிகபட்ச விலையினைப் பெற்றுவருகிறது.

**கோதுமை, நெல் ஆகியவற்றின் விலை நிர்ணயிப்பிலும் தென் மாநிலங்களின் எதிர்ப்பை மத்திய அரசு சம்பாதித்திருக்கிறது நெல் விலையை நிர்ணயிப்பதில் தென் மாநிலங்களுக்கு பாதகமாகவே மத்திய அரசு நடந்து வருகிறது.**

ஒரு குவிண்டால் கோதுமை 112 ரூபாய் 50 காசு என்றும் ஒரு குவிண்டால் நெல் 77 ரூபாய் என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஆனல் கோதுமையைக் காட்டிலும் அரிசிதரத்தில் உயர்ந்ததாகும். பொது மார்க்கெட்டில் நல்லரக அரிசி விலை கிலோ 4 ரூபாய். ஆனல் நல்லரக கோதுமையின் விலை 2 ரூபாயிலிருந்து 2 ரூபாய் 50 காசுவரை தான் விற்கிறது. **நிலைமை இப்படி இருக்க நெல்லுக்கும் கோதுமைக்கும் ஒரே அடிப்படையில் விலை நிர்ணயித்தது எப்படி சரியாகும்?**

நெல் உற்பத்திக்கு அதிக உழைப்பு தேவைப்படுகிறது. நிலவளமும், நீர்வளமும் இருந்தால் போதாது தினந்தோறும் கண்காணித்துப் பேணினல் தான் நெல் அதிக மகசூலைத்தரும். ஆனல் கோதுமை அப்படியல்ல. 3 அல்லது 4 முறை தண்ணீர்விட்டால் போதுமானது. நிலவளமும் நீர்வளமும் அதிகத்தேவை என்றும்கூற இயலாது. கோதுமை உற்பத்தியாளர்களை காட்டிலும் இருமடங்கு கடின உழைப்பினை நெல்உற்பத்தியாளர்கள் செலுத்தியாக வேண்டும். **இதை கவனத்தில் கொண்டு நெல்விலையை உயர்த்த வேண்டும் என்ற தென்மாநில முதல்வர்களின் கோரிக்கையை மத்திய அரசு நிறைவேற்றிட வேண்டும்.**

உணவுதானியவிலை நிர்ணயிப்பில் மாநிலங்களுக்கு அநீதி இழைக்கப்படுவதும், இது விஷயத்தில் மாநிலங்கள் பின்னுக்குத் தள்ளப்படுவதும், நிறுத்தப்படுமேயானல் மாநிலங்களுக்கும் மத்திய அரசுக்கும் இந்தப் பிரச்சினையைப் பொருத்தவரை மோதல் ஏற்படுவது சாத்தியமில்லை.

தமிழாக்கம்

**எம். அரங்கநாதன்**

சென்னை விமானநிலையத்தில்

# ரகளை செய்த ஜனதா தொண்டனை சந்திக்க சந்திரசேகர் மறுப்பு

**சென்னை, ஜூலை 30— சென்னை விமானநிலையத்தில் ஜனதா தொண்டர்கள் ரகளை செய்ததால் அவர்களைச் சந்திக்க ஜனதாத் தலைவர் சந்திரசேகர் மறுத்து விட்டார். விமான நிலையத்தில் ஒழுங்கீனமாக நடந்து கொண்டவாகளுக்கு அவர் கண்டனம் தெரிவித்தார்.**

ஜனதாத் தலைவர் சந்திரசேகர் இன்று (ஞாயிற்றுக்கிழமை) காலை விமானம் மூலம் சென்னை வந்தார். அவரை வரவேற்க விமான நிலையத்துக்கு ஜனதாக்கட்சியைச் சேர்ந்த 100 பேர் வந்திருந்தனர்.

விமானம்வந்ததும்ஜனதா தொண்டர்கள் முண்டியடித்துக்கொண்டு நுழைவு டிக்கட் வாங்காமலேயே விமான நிலையத்துக்குள் நுழைய முயன்றனர். இதைக்கண்ட விமான நிலைய அதிகாரி ஒருவர் ஜனதாக் கட்சி தலைவர்களிடம் சொல்லி தொண்டர்களை விமான நிலைய விதிகளை கடைப் பிடிக்கச் செய்யும்படி கேட்டுக் கொண்டார்.

ஆனல் இது போன்ற சம்பவங்கள் திடீரென்று நடந்து விடுவதால் தங்களால்கட்டுப்படுத்த முடியாமல் போய்விட்டது என்று ஜனதாத் தலைவர்கள் கூறினர்கள். விமான நிலைய வாசலில் நின்றிருந்த ஊழியரை இடித்துத்தள்ளி விட்டு ஜனதா தொண்டர்கள் நூறுபேரும் உள்ளே நுழைந்தனர்.

இந்தச் சம்பவத்தைக் கேள்விப்பட்டதும் சந்திரசேகர் வருத்தமடைந்தார் இதனல் வரவேற்க வந்திருந்த ஜனதாத் தொண்டர்களை சந்திக்க சந்திரசேகர் மறுத்து விட்டார். ரகளை செய்த ஜனதாவினருக்கு அவர் கண்டனம் தெரிவித்தார்.

(முன்னதாகத் திட்டமிட்டபடி சந்திரசேகர் திறந்த ஜீப்காரில் வருவதாக இருந்தது. ஆனல் வரவில்லை.)

## கண்டன பேரணி..

முதல் பக்கத் தொடர்ச்சி

எஸ். பாபு, பெ. வெங்கடேசன், பாண்டுரங்கன் வழக்கறிஞர் என். ஜெயராமன், எம்.ஜி.ஆர் மன்ற நிர்வாகிகளான சின்னதுரை, உமாபதி, ராம் மோகன், வெங்கடாசலம் தொழிற்சங்க பிரமுகர்கள் பெருமாள் ராதா கிருஷ்ணன், ராஜ செல்லம், என். நந்தன், குமார், தாமோதரன், செல்வராஜ், குழந்தைவேல், விவசாயிகள் சார்பில் தயாளன், அ. கோ. வேணு கோபால், மதியழகன், மாதவன், கிருஷ்ணன், கோவிந்தராஜ், கிருஷ்ணன், மணிவண்ணன், கோபி, ஆதிசேஷன், சேஷாசலம்மற்றும் மகளிர் பிரிவினருடன் ஆயிரக் கணக்கான தொண்டர்களுடன் நகரின் முக்கிய வீதிகளின்வழியாகசென்று ஆளுநர் மாளிகையை அடைந்தனர்.

அங்கு புதுவை மாநிலத்தின் ஆளுநர் குல்கர்னியை சந்தித்து மகஜர் ஒன்றை கொடுத்தனர்.

பி. கே. வேணுகோபால், சட்டமன்ற உறுப்பினர்கள் என். மணிமாறன், சூசைராஜ், பி,செல்வராஜ் மணியன். சிவா. லோகநாதன் ஆகியோர் ஆளுநர் குல்கர்னியிடம் மகஜரை கொடுத்தனர்.

மகஜரை பெற்றுக் கொண்ட ஆளுநர் "இந்த பிரச்சினையில் சட்ட சிக்கல்கள் இருப்பதால், மத்திய உள்துறை அமைச்சகத்துக்கு தெரிவித்து, அவர்களுடைய கருத்தைஉங்களுக்குத்தெரிவிக்கிறேன். நீங்கள் திங்கட்கிழமை வந்து என்னை சந்தியுங்கள்" என்று தெரிவித்தார்.

பின்னர் கழகத்தினர் நடத்திய பேரணி முடிவுற்றது.

# 'சட்டநாதர்' சண்முகம்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

வெளியிடப்பட்டிருக்கிறது. அந்தப் பேச்சின் பகுதிகள் அப்படியே இங்கே தரப்படுகின்றன.

'எஸ், எஸ். ராஜேந்திரன் வழக்கில் நாம் வெற்றி பெற்றது வழக்கறிஞர்களாகிய எங்கள் திறமையால் மட்டுமல்ல, பொது மக்களாகிய உங்கள் ஆசியால், நீங்கள் தந்த தைரியத்தால், காட்டிய அக்கறையால், விழிப்புணர்ச்சியால் தான் வெற்றி பெறருேம்,

இந்த வழக்கு மட்டுமல்ல, எந்த வழக்காலும் எந்த நீதிமன்றமாலும், லட்சக்கணக்கில் மக்கள் வந்தால் நீதிபதி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அரசின் விருப்பத்தைத் தீர்ப்பாக எழுதமாட்டார். நிமிர்ந்து பார்ப்பார். அவர் பார்வையில் எம். ஜி. ஆர், தெரியமாட்டார். மக்களைப் பார்ப்பார் நீதியை நியாயத்தைப் பார்ப்பார்.

மககள் விழிப்புடன் இருக்கிருர்கள். மக்களின் ஆதரவு தான் நம்மீது போட்டிருக்கிற பொய் வழக்குகளை திரும்பப பெறசெய்யும்...

ஜூலை 31-ந்தேதி கலைஞர், பேராசிரியர் உட்பட 135 பேர் மீதான வழககு விசாரணைக்கு வருகிறது.

அன்று இந்த 135 பேரும் வழக்கறிஞர்களும் நீதிமன்றததிற்கு நடந்தே போகிருேம. அன்றைய தினம் பொதுமக்களாகிய நீங்கள் ஓரணியாக திரண்டு வரவேண்டும் இந்த நாட்டு மககளாகிய நீங்கள் பெற்று ருக்கிற விழிப்புணர்ச்சியை நீதியின் மேல் கொண்டிருக்கும் அக்கறை காடடும் வகையில் வாருங்கள். அது தான நீதியை நிலை பெறச் செய்யும்! இவ்வாறு கருணாநிதியின் வக்கீல் பாளை சண்முகம் பேசிய அந்தப்பேச்சு 9-7-78 சென்னை பதிப்பு முரசொலியில் வெளிவந்திருக்கிறது.

*வெளியிடப்பட்ட பேச்சு இது! அப்படியானல் உண்மையில் மேடையில் எப்படிப் பேசியிருப்பார்கள் என்பதை அவரவர் கற்பனைசெய்துகொள்ளலாம்*

*இதன் பொருள் என்ன?*

*கோர்ட் முன்னல் குற்றம் சாட்டப்பட்டவர்களை ஆதரித்து மக்கள் கூட்டம் திரண்டால் தான் நீதிபதிகள் ஒழுங்காக தீர்ப்பு எழுதுவார்கள்! இல்லையென்றால் நமக்கு சாதகமாக தீர்ப்பு வழங்க மாட்டார்கள்" என்று பாளைசண்முகம் கூறுகிருர்.*

தமிழக நீதித்துறைக்கு, நீதிபதிகளுக்கு இதைக்காட்டிலும் பச்சையான வெளிப்படையான அப்பட்டமானமிரட்டல் வேறுஇருக்க முடியுமா?

இதில் இருநது என்ன தெரிகிறது? தங்களுடைய குற்றமற்ற தன்மையில் கருணாநிதி தரப்புக்கு நமபிக்கை இல்லை என்பது ஒன்று.

இரண்டாவது,வாதங்களாலும் சட்ட ஆதாரங்களாலும் நீதிமன்றததில் தங்கள் தரப்பை நிலைநாட்ட இயலாது. கூட்டததைக்காட்டி மிரட்டினல் நீதிபதிகள் மிரண்டுபோய் தீர்ப்பு எழுதுவார்கள் எனபது மற்றென்று!

"சட்டநாதர்" சணமுகம சந்து முனையில் பேசுவது போலப் பேசியிருக்கிருர்.

கோர்ட்டை பகிரங்கமாக அவமதிக்கும் "சட்டநாதர்கள்" தான் சட்டம் ஒழுங்கு பற்றியும், ஜனநாயக நெறிமுறைகள் பற்றியும வாய்கிழியப பேசுகிருர்கள்

இதனுடைய விபரீதங்களைத் தமிழக மக்கள் உணர்வார்களாக.

-[illegible]

# கழகச் செய்திகள்

### வடபழனி

30-7-78 ஞாயிறு மாலை 6 மணிக்கு சிங்கார வேலர் திடலில் வி. கு. சச்சிதானந்தம் தலைமையில் பேசுவோர்: ஜேப்பியார், சி. வி. அன்புத்தம்பி, கோடம்பாக்கம் குமார், ஜெ. சந்திரா, ஜெ. பாலன், கு. க. செல்வம், சித்ர மகால் கிருஷ்ண மூர்த்தி, சா. கோவிந்தசாமி, தி. நகர் மூர்த்தி, ஆண்டாள் ரவூத், பி. ஏ. கணபதி, ஏ. ஆர். வேதகிரி, பா. முனுசாமி மற்றும் பலர்.

### துறைமுகப் பகுதி

30-7-78 ஞாயிறு மாலை 7 மணிக்கு தம்புசெட்டித் தெருவில் பெ. வேலாயுதம் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் ராஜாமுகமது, அமைச்சர் சுப்புலட்சுமி, பி. ராமபத்திரன், ஜி. கே. எஸ்., முஸ்தபா, ஏ. பி. ஜனர்த்தனம் எம். பி., மதுசூதனன், வண்ணை கோவிந்தன், ராமச்சந்திரன், பீர்முகமது, கணேசன் மணி, வடிவேலு, அருள் மற்றும் பலர்.

### ஜோமளீஸ்வரன் பேட்டை

31-7.88 திங்கள் மாலை 7 மணிக்கு சி. பி. முதலி தெரு (சித்ரா பின்புறம்) மொ. தங்கபாண்டியன் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் ராஜாமுகமது, ஜேப்பியார், கோடம்பாக்கம் குமார், சி. வி ஆலழகன் லட்சுமிமுத்து டி. சகுந்தலா அப்துல் மஜீது முகையதீன், ராதா, கோபி, நெல்லை ஜெபமணி மற்றும்பலர்.

### குமாரபாளையம்

1-8-78 செவ்வாய் இரவு 7 மணிக்கு அண்ணா திடலில் ஜி. ஏ. என். எஸ். நாகைய்யா தலைமையில் பேசுவோர்:-

நிதியமைச்சர் நாஞ்சிலார், அமைச்சர் பொன்னையன், கண்ணன் எம். பி. குழந்தைவேலு எம். பி. எஸ். எஸ், எம். சவுண்டப்பன் மற்றும்பலர்.

### வந்தவாசி

2-8-78 புதன் மாலை 7 மணிக்கு அண்ணாதிடல் மார்க்கெட் அருகே ஜெ பாலு தலைமையில் பேசுவோர்: நாவலர், சி. வேணுகோபால் எம். பி., ஏ. கே அரங்கநாதன் எம். எல். ஏ பி. முனுசாமி எம். எல். ஏ, கோ. கோதண்டம், ஆர். மணவாளன் கே. சண்முகசுந்தரம் வி. டி. அண்ணாமலை, பி. வி. அப்பாஸ் சதக்கான் மற்றும்பலர்.

### வேலாயுதம் பாளையம்

2-8-78 புதன்கிழமை மாலை 7 மணிக்கு கலைவாணர் திடலில் எஸ். சுப்பிரமணியம் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் ஆர். சவுந்தரராசன், கு. வடிவேல் எம். எல். ஏ, வாங்கிலியப்பன், க. பழனியப்பன், டி. பொன்னுசாமி, கே. பழனிச்சாமி, ச. பழனியப்பன், வி. கே. கந்தசாமி, கே. வேல்சாமி, ஏ. சண்முகம், கே. அனீபா, எஸ். ராமசாமி, கதிர்வேல், பாலுசாமி மற்றும் பலர்.

### கீழ்பென்னுத்தூர்

3-8-78 வியாழன் மாலை 6 மணிக்கு தீரன் பாலசுந்தரம் திடலில் ஆர். ரகுமூர்த்தி தலைமையில் பேசுவோர்: டாக்டர் நாவலர், சி. வேணுகோபால் எம். பி., சி. என். விசுவநாதன் எம். பி. இரா. ச. மாறன், பொ. தங்கவேல் எம். எல். ஏ., கே. ஆர். வெங்கடேசன், எஸ். கண்ணன், சி. வேடியப்பன், எ. வேலு மற்றும் பலர்.

### லால்பேட்டை

கழகம், மதுரை மாநகராட்சியை கைப்பற்றியதையொட்டி லால்பேட்டையில் எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் இனிப்புகள் வழங்கப்பட்டன. பி. எஸ். அபிபூர் ரகிமான், வி. ராமலிங்கம், கோவிந்தராசன், அபிபுல்லா, ரவீந்தரன் ஆகியோர் நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டனர்.

### உரத்தநாடு

உரத்தநாடு ஒன்றிய வடசேரி கிளைக்கழகத்தின் சார்பில் பல இடங்களில் கழகக் கொடியேற்றுவிழா நடந்தது அம்பேத்கார் காலனி, சிவன்கோவில் காலனி, அய்யனர்கோவில் காலனி, தென்னந்தோப்பு காலனி காளியம்மன் கோவில் தெரு முதலிய இடங்களில் கழகக்கொடியேற்று விழாக்கள் நடந்தன. தஞ்சை நகர அமைப்பாளர் கதாதரன் உரத்தநாடு ஒன்றிய அமைப்பாளர் கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் பேசினர். கூட்டத்தில் தி. மு. கவிலிருந்து விலகிய 30 தோழர்கள் கழகத்தில் சேர்ந்தனர்.

நாலரை கோடி செலவில் குடியிருப்புக்கள்

# குடிசை மாற்று வாரிய பணிகள்: தலைவர் ராமபத்திரன் பேட்டி

**சென்னை, ஜூலை 30— "நாலரை கோடி ரூபாய் செலவில் குடியிருப்புக்கள் கட்டப்படும்" என்று குடிசை மாற்று வாரியத்தலைவர் ராமபத்திரன் கூறினர்.**

கடந்த ஓராண்டு காலத்தில் குடிசைமாற்று வாரியம் ஆற்றிய பணிகள் திட்டங்கள் பற்றி அவர் கூறியதாவது:

தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியம் 1977-78ம் ஆண்டில் குடிசை நீக்கம் மற்றும் மேம்பாடு பணிகளுக்கென ரூபாய் 405 லட்சத்து 24 ஆயிரம் செலவிடப்பட்டுள்ளது.

குடிசைமாற்று வாரியம் 1977-78-ம் ஆண்டில் 4 கோடியே 5 லட்சத்து 24 ஆயிரம் ரூபாய் செலவில் 4318 குடியிருப்புகளை கட்டித் தந்துள்ளது.

1977-78ம் ஆண்டில் பணிகளுக்கென செலவிடப்பட்ட நிதி 1975-76ம் ஆண்டைவிட 20 சதவிகிதம் உயர்ந்துள்ளது.

உலக வங்கி உதவியுடன் 20 குடிசைப் பகுதிகளில் வசிக்கும் 4137 குடும்பங்கள் பயன்பெற வழி செய்துள்ளது.

தொழில் நுட்ப முறையில் கையாண்ட சில நடவடிக்கைகளால் கட்டுமானச்செலவு 25 சதவீதம் குறைந்திருக்கிறது முன்பு ஒரு குடியிருப்பு கட்ட 8 ஆயிரம் செலவிடப்பட்டது. இப்போது 6 ஆயிரத்தில் அதே குடியிருப்பைக் கட்டமுடிகிறது

வரும் ஆண்டில் 3.52 கோடி செலவில் 4233 குடியிருப்புகளும், உலகவங்கி உதவியுடன் ஒருகோடிசெலவில்16,135 குடும்பங்கள் பயன்பெறும் வகையில் குடிசைப் பகுதிகள் மேம்பாடு திட்டமும் நிறைவேற்ற திட்டமிடப்பட்டுள்ளது.

விரைவு மேம்பாடு சுற்றுப்புற சூழ்நிலை அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் 1 கோடி செலவில் 33168 குடும்பங்கள் பயன்பெறும் திட்டமும் வெள்ளச் சீரமைப்புக்காக 19.47 லட்சம் செலவில் ஒரு திட்டமும் நிறைவேற்றப்படும்.

நடப்பு ஆண்டில் 3 கோடியே 20 லட்சத்து 87 ஆயிரம் ரூபாய் செலவில் 4080 குடியிருப்புகள் கட்டுவதற்கான திட்டமும் மேற்கொள்ளப் படவிருக்கின்றன.

நடப்பு ஆண்டிலும், அடுத்தஆண்டிலும் 32573 குடும்பங்களுக்குக்குடியிருப்பு வசதிகள்அல்லது அடிப்படை வசதிகள் அமைத்துத் தரப்படும்.

வாடகையை கூட்டும் எண்ணம் இல்லை. தற்போது குடியிருப்போர் பாக்கி வைத்திருக்கும் தொகையே 6,2 லட்சம் ரூபாய் ஆகும்.

அனுமதியின்றி குடியேறியவர்கள் நிச்சயம் அகற்றப்படுவார்கள். நோட்டீஸ் மூலம் வேண்டுகோள் விடுத்து போதிய அவகாசம் கொடுக்கிருேம் என்ருலும் சில பத்திரிகைகள் இதை பெரிய பிரச்சினையாக்கி விடுகின்றன.

புதுடெல்லி வீட்டு வசதி மற்றும் நகர்ப்புற அபிவிருத்தி நிறுவனம் 4380 குடியிருப்புகள் ரூபாய் 336.49 லட்சம் செலவில் கட்டுவதற்கு ஒப்புதல் அளித்துள்ளது.

மேலும் ரூபாய் 73.67லட்சம் செலவில் 960 குடியிருப்புகள் கட்டுவதற்கான 5 திட்டங்கள் ஹட்கோ நிறுவனத்திற்கு ஒப்புதலுக்கு அனுப்பப்பட்டுள்ளன. இவை தவிர ரூபாய் 275 லட்சம் செலவில் 3502 குடியிருப்புகள் கட்டுவதற்கான 8 திட்டங்கள்ஹட்கோவிற்கு அனுப்ப தயார் செய்யப்படுகிறன

இவ்வாறுகுடிசை மாற்று வாரியத் தலைவர் ராமபத்திரன் கூறினர்.

## மறைவு

சென்னை52வது வட்ட அமைப்பாளர் வேலு பாண்டியனின் தந்தை முனுசாமி (வயது 65) இன்று காலை மரணமடைந்தார்.



தங்கமணி பப்ளிகேஷனுக்காக 156, அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்திஅச்சகம், கச்சேரிசாலை, சென்னை-600004 ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

## சுமைதூக்கும் தொழிலாளர் வேலை நிறுத்தம் வாபஸ்

சென்னை, ஜூலை 30- ராயபுரம், சால்ட் கோட்டர்ஸ், கொருக்குப்பேட்டை, எழும்பூர், பீச் ஸ்டேஷன், ஆகிய ரயில் நிலையங்களில் பணிபுரியும் சுமை தூக்கும் தொழிலாளர்கள் கூலி உயர்வு, அடையாள அட்டைகள் வழங்க வேண்டும் என்ற கோரிக்கைகளுக்காக கடந்த 24-ந் தேதியிலிருந்து வேலைநிறுத்தம் செய்து வந்தனர்.

தொழிலாளர் நல அலுவலர் டி. மணிவாரதி முன்னிலையில் நடந்த பேச்சு வார்த்தைகளில் சுமுக உடன்பாடு ஏற்பட்டு தொழிலாளர்கள் வேலைக்கு திரும்பினர்.

அண்ணா தொழிலாளர் பேரவையின் சார்பில் ஜான் இந்தப் பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டார்.

### புரட்சித் தலைவர் முன்னிலையில்

## கழகத்தில் இணைந்த போடி யூனியன் முன்னாள் தலைவர்

சென்னை, ஜூலை 30— போடிநாயக்கனூர் ஊராட்சி ஒன்றிய முன்னாள் தலைவர் செவத்தி வீரன் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தார்.

போடிநாயக்கனூர் ஊராட்சி ஒன்றியத் தலைவர் செவத்தி வீரன் முன்பு தி.மு.க. வில் இருந்தார்.

புரட்சித்தலைவர் தி. மு. க. விலிருந்து நீக்கப்பட்டபோது போடியில் நடந்த துப்பாக்கிசூட்டைக்கண்டித்து அவர் தி.மு.க விலிருந்து ராஜினுமாச் செய்தார்.

அதன்பின் அவர் எந்தக் கட்சியிலும் சேரவில்லை.

நேற்று காலை அவர் முதல்வர் புரட்சித் தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தார்.

அப்போது அமைச்சர் காளிமுத்து, அன்பழகன் எம்.பி. கூடலூர் ராமசாமி எம்.பி பாலகுரு எம். எல். ஏ. ஆகியோர் உடனிருந்தனர்.

## மேட்டூர் அணைதிறப்பு

சென்னை ஜூலை 30- "மேட்டூர் அணையின் கிழக்கு மற்றும் மேற்குக் கரைக்கால்வாய்கள், புதிய கட்டளை உயர்மட்டக் கால்வாய், புள்ளம்பாடி கால்வாய் ஆகியவற்றில் 1-8-1978 அன்று பாசனத்திற்குத் தண்ணீர் திறந்துவிடப்படும்" என்று தமிழக வேளாண்மை - நீர்ப்பாசனத்துறை அமைச்சர் ப. குழந்தைவேலு அறிவித்தார்.

"காவிரியாறு உற்பத்தியாகும் 'மெர்க்காரா' பகுதியில் தென்மேற்குப் பருவமழையின் காரணமாக நல்ல மழை பெய்து வருவதாலும், மேட்டூர் அணைக்கு அதிக தண்ணீர் வருவதாலும் ஆகஸ்ட் 1-ஆம் தேதியே மேற்கூறிய கால்வாய்களில் தண்ணீர் திறந்துவிட முடிவு செய்யப்பட்டுள்ளது என்று தெரிவித்தார்.

## மீனவருக்கு மட்டுமே விசைப்படகு: அமைச்சர் எட்மண்ட் அறிவிப்பு

பேராவூரணி, ஜூலை 30- விசைப்படகுகளை உண்மையான மீனவர்களுக்கே வழங்க அரசு முடிவு செய்திருக்கிறது. பைபர் கிளாஸ் படகுகளையும் ஏழை மீனவர்களுக்கு வழங்க அரசு முடிவு செய்துள்ளது என்று அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட் கூறினர்.

தஞ்சை மாவட்டம், பேராவூரணியை அடுத்த மல்லிப் பட்டினத்திற்கு வருகை தந்த அமைச்சர் ஜி. ஆர். எட்மண்டுக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது.

வரவேற்புக்கு நன்றிதெரிவித்து அமைச்சர் எட்மண்ட் பேசியதாவது:

கடலில் சுமார் 2 அல்லது 3 மைல் சென்று அதன்பிறகு தெற்கிலோ, வடக்கிலோ போய் மீன் பிடிக்கலாம் என்று சொன்னேன். அதை யாரும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. மனம் உண்டானல் இடம் உண்டு என்பதைஉணரவேண்டும்.



நீங்கள் சுமூகமான முடிவு எடுத்தால் அதனை செய்து தர அரசு தயாராக இருக்கிறது. நீங்கள் எந்தவழியில் முன்னேறவிரும்புகிறீர்களோ அந்த அளவுக்கு செய்துதர அரசு தயாராகஇருக்கிறது.

மீனவர்களுக்கு வழங்கப்படுவதற்காக 150 விசைப் படகுகள் அரசிடம் தயாராக உள்ளன.

ஆனல் கடலில்போய் மீன் பிடிக்கும் உண்மையான மீனவர்களுக்குத்தான் விசைப்படகு தர வேண்டும் என்றும், முதலாளியாக இருந்து கொண்டு கூலிக்கு ஆள் பிடித்து மீன் பிடிப்பவர்களுக்குத் தருவதில்லை என்றும் இந்த அரசு முடிவு செய்திருக்கிறது.

இதுவரை சுமார் 400 விண்ணப்பங்கள் விசைப் படகு கோரி வந்துள்ளன. அதில் உண்மையான மீனவர்கள் சொற்பமாகவே உள்ளனர்.

முன்பு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்க வேண்டும், பிறகு மீதியைத் தவணைமுறையில் செலுத்த வேண்டும் என்ற நிலைமை இருந்தது.

இப்போது உண்மையான மீனவர்கள் பொருளாதார வசதி இல்லாமல் இருப்பதை கருத்தில் கொண்டு புதிய முறை உருவாக்குவதைப்பற்றி அரசு ஆலோசித்துக் கொண்டிருக்கிறது. ஆகவே விசைப்படகுகள் உண்மையான மீனவர்களுக்குத்தான் கொடுக்கப்படும் என்பதை உறுதி

(4-ம் பக்கம் பார்க்க)

## பொய் செய்திக்கு மறுப்பு

சென்னை, ஜூலை 30 புளியந்தோப்பு பகுதி கழகத் தோழர்கள் குறித்தும் என்னைப் பற்றியும் 'அலை ஓசை'யில்வந்துள்ள செய்தி முற்றிலும் உண்மைக்குப் புறம்பானதாகும் என்று 47-வது வட்ட கழக அமைப்பாளர் மு. பா. மாரி கூறியுள்ளார்.

இப்பகுதியில் உள்ள கழகத் தோழர்கள் மீது களங்கம் ஏற்படுத்தும் வகையில் 'அலைஓசை' பொய்ச் செய்தி வெளியிட்டுள்ளது கண்டிக்கத்தக்கது. இந்த அறிக்கை கண்டவுடன் 'அலைஓசை' மறுப்பு தெரிவிக்க வேண்டும். இல்லையென்றால் சட்டப்படி நடவடிக்கை எடுக்கப் படும் என்று மு. பா. மாரி ஒரு அறிக்கையில் கூறியுள்ளார்.

## விழுப்புரத்தில் அமைதி: நிவாரணப்பணிகள் தீவிரம்

# அரிசி - துணிகள் வினியோகம்

## சிறப்பு துணைகலெக்டர் நியமனம்: முதல்வர் புரட்சித் தலைவர் அறிவிப்பு

விழுப்புரம், ஜூலை 30- விழுப்புரத்தில் இப்போது அமைதி நிலவுகிறது. கலவரத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு இலவசமாக அரிசி, மண்ணெண்ணை. ஆடைகள் மற்றும் அத்தியாவசிய பொருட்கள் வழங்கப்பட்டன. நிவாரண நடவடிக்கைகளை கவனிக்க சிறப்பு துணை கலெக்டர் ஒருவர் நியமிக்கப்பட்டிருப்பதாக முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

நேற்று சென்னை கோட்டையில் விழுப்புரம் சம்பவங்கள் குறித்து உயர்மட்ட ஆலோசனைக் கூட்டம் முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் நடந்தது. விழுப்புரம் சம்பவம் பற்றி நேரில் சென்று கண்டுவந்த அமைச்சர்கள் ஆர்.எம்.வீ., சவுந்தர பாண்டியன், தலைமைசெயலாளர், கார்த்திகேயன், 'ஐ. ஜி.' பொறுப்பில் உள்ள ஆர். கிருஷ்ணசாமி ஆகியோரும் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

நிதியமைச்சர் நாஞ்சிலாரும் இக் கூட்டத்தில் பங்கேற்றார்.

### முதல்வர் பேட்டி

கூட்டம் முடிந்த பின் நிருபர்களிடம் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:-

"விழுப்புரம் சம்பவத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணப் பணிகள் மேற்கொள்வதில் துரித நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. அத்தியாவசியத் தேவைகள் உடனடியாகப் பூர்த்தி செய்யப்பட்டுள்ளன.

அரிசி, மண் எண்ணெய், உடைகள் முதலியவை இலவசமாகத்தரப்பட்டது ரொக்கப்பணமும் தரப் பட்டது.

நிவாரணப்பணிகளைத் துரிதப்படுத்தவும் ஒழுங்குபடுத்தவும் தனி துணை (டெபுடி.) கலெக்டர் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

### போலீஸ் அதிகாரிகள் மாற்றம்

விழுப்புரம் டெபுடி போலீஸ் சூப்பிரண்டு, ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர், ஒரு சப் - இன்ஸ்பெக்டர் ஆகியோர்வேறிடங்களுக்கு மாற்றப்பட்டிருக்கிறார்கள்.

மேற்கண்டவாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினர்.

## சென்னையில் தடை உத்தரவு

சென்னை, ஜூலை 30- ஜூலை 30 முதல் ஆகஸ்டு 11 ந் தேதி வரை சென்னை நகரில் ஊர்வலம், பொதுக் கூட்டம் நடத்த போலீசார் தடை உத்தரவு பிறப்பித்துள்ளனர்.





### அமைச்சர்விளக்கம்:

## இந்திராவுக்கு பாஸ்போர்ட் மறுப்பது ஏன்?



சென்னை, ஜூலை 30- சென்னையில் நிருபர்களுக்குப் பேட்டி அளித்த வெளிவிவகார ராஜாங்க அமைச்சர் சமரேந்திர குண்டு "இந்திரா மீது வழக்கு விசாரணை நடந்து வரும் நீதிமன்றங்களிலிருந்து அனுமதி வாங்கி வந்தாலன்றி அவருக்கு பாஸ்போர்ட் வழங்குவது சிரமம்" என்றார்.

★

## பள்ளி கட்டிடம் கட்ட கழகத் தோழர் உதவி

பேராவூரணி, ஜூலை 30- சுமார் 3 ஆயிரம் மதிப்புள்ள தென்னை மரங்களுடனுள்ள 22 செண்ட் நிலத்தை, பள்ளிக் கட்டிடம் கட்டிக்கொள்ள வழங்கிய கழகத் தோழர் எம். ஏ. முத்துசாமியை அமைச்சர் எட்மண்ட் பாராட்டினார்.

### ராணுவ அலுவலகத்தில் ஊழியர் தற்கொலை

சென்னை, ஜூலை 30- சென்னை கோட்டையில் உள்ள ராணுவ அலுவலகத்தில் ராணுவ ஊழியர் வி. எல். பாண்டியன் தூக்குப் போட்டு தற்கொலைசெய்துகொண்டார் இவர்மீது திருட்டு வழக்கு பதிவு செய்யப்பட்டதால் மனமுடைந்து தற்கொலை செய்துகொண்டார் என்று தெரிகிறது.

## திரையுலக வளர்ச்சி பணிகள்: அமைச்சர் ஆர்.எம்.வீ. உறுதிமொழி

சென்னை, ஜூலை 30- "திரையுலக வளர்ச்சிப் பணிகளுக்கு கழக அரசு தன்னாலான அத்தனை உதவிகளையும் செய்யும். அதே நேரத்தில் திரைப்படத் தயாரிப்பாளர்கள் அரசின் உணர்வை மதித்து நடக்க வேண்டும்" என்று அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினர்.

தென்னிந்திய திரைப்பட தயாரிப்பாளர்கள் சங்க (கில்டு) 13வது ஆண்டு பொதுக்குழு கூட்டத்தை தொடங்கி வைத்து அமைச்சர் ஆர். எம். வீ. பேசியதாவது:

கழக அரசு பதவியேற்ற ஆண்டிலேயே திரையுலகத்துக்கு பல்வேறு உதவிகளை செய்திருக்கிறதுஎன்றுஇங்கே பேசிய அனைவருமே குறிப்பிட்டனர். நல்ல தமிழ்ப் படங்கள் ஐந்துக்கு தலா ஒரு லட்ச ரூபாய் உதவித் தொகை அளிக்கப்படுகிறது. கடந்த ஆண்டில் 3 படங்களுக்கு மட்டுமே தலா லட்சரூபாய் அளிக்கப்பட்டதால் மீதமுள்ள இரு லட்ச ரூபாயையும் சேர்த்து இந்தஆண்டு 7 படங்களுக்கு தலா ஒருலட்சம்வீதம் அளிக்கப்பட இருக்கிறது.

இப்படியெல்லாம் சில உதவிகளைச் செய்தால் சினிமாக்காரனுக்கு ஏன் செய்தாய் என்று வெளியில் மட்டுமல்ல- சட்டமன்றத்திலும் கேட்டனர். அப்படிப் பட்டவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள் என்பதை தயாரிப்பாளர்களும் திரையுலக சம்பந்தப் பட்ட அனைவரும் உணர வேண்டும்.

### தயாரிப்பாளருக்கு வேண்டுகோள்

அரசின் உணர்வை மதித்து நடங்கள் என்று தயாரிப்பாளர்களைக் கேட்டுக்கொள்கிறேன். அப்படி நடந்தீர்கள் என்றல் அரசும் உங்களை மதிக்கும். தமிழக அரசு நடத்தும் சிறந்த படங்களுக்கான போட்டிக்கு அதிகமான படங்களை அனுப்பவேண்டும். இத்தகைய போட்டியிலும் அதிக ஆர்வத்தோடு கலந்துகொள்ளவேண்டும்.

சிறந்த படங்களுக்கான பரிசளிப்பு விழாவை-அரசு நடத்தும் அந்த விழாவை

(4-ம் பக்கம் பார்க்க)



## காவிரி நதிக்கரையில் எண்ணை கண்டுபிடிப்பு: பகுகுண தகவல்

சென்னை, ஜூலை 30— "காவிரிநதி தீரத்தில் எண்ணை கண்டுபிடிப்பு பரிசோதனைப்பணிகள் மேற்கொள்ளப்படும்" என்று மத்திய அமைச்சர் பகுகுணா தெரிவித்தார்.

சென்னையில் இந்துஸ்தான் வர்த்தக சபையின் 32-வது ஆண்டின் பேரவைக்கூட்டத்தை மத்திய அமைச்சர் பகுகுணா துவக்கி வைத்து பேசியதாவது:

தேசியவளர்ச்சிக்கு உதவும் வகையில் தனியார் துறை விளங்க வேண்டும். சில விஷயங்களை தனியார் துறையால் மட்டுமே நிறைவு செய்ய இயலாது.

தாய் நிலையில் இருந்து பொதுத்துறை, தொழில் துறை வளர்ச்சிக்கு உதவி புரிகிறது. சிறிய தனியார் தொழிலில் ஏற்படும் நலிவு தொழில் துறையையே பாதிக்கச் செய்கிறது.

"பாம்பே ஹை" பகுதியின் எண்ணெய் அபிவிருத்திக்கு முந்திய அரசே காரணம். 30 ஆண்டுகால நமது முயற்சிகளுக்கு நல்ல பயன் கிடைத்துள்ளது. இந்த வகையில் முந்தைய அரசின் பணிகளை நாம் மறக்க இயலாது.

### பரிசோதனைப் பணிகள்

குஜராத், பம்பாய் அஸ்ஸாம் பகுதிகளில் எண்ணை கண்டுபிடிப்பு முயற்சிகள் வெற்றிகரமாக நடந்து வருகின்றன.

பாண்டிச்சேரி பகுதியில் எண்ணெய் வள கண்டுபிடிப்பு பணிகள் நடந்தன. ஆயிரத்து600மீட்டர்வரை துரப்பணப்பணிகள் நடந்தன. மொத்தம் 6 ஆயிரம் மீட்டர் வரை துளைத்துப் பார்த்திட வேண்டும். இதுவரை அங்கு எண்ணெய் கண்டு பிடிக்கப்படவில்லை.

அந்தமான் தீவு காவிரி நதி தீரம், வங்கக் கடலோரப் பகுதிகளிலும் எண்ணெய் கண்டுபிடிப்பு பணிகள் மேற்கொள்ளப்படும். நாடு முழுவதும் ஆய்வுப் பணிகள் மேற்கொள்ள அரசு திட்டம் வகுத்துள்ளது.

இவ்வாறு மத்திய அமைச்சர் பகுகுணா கூறினர்.

### தொழில் வளர்ச்சியில் தமிழகம்...

வர்த்தக சபைத்தலைவர் ஆர்.எம்.தவே அனைவரையும்வரவேற்றுப் பேசுகையில் "இந்தியாவில்தமிழகம் தொழில் துறையில் முதன்மையான இடத்தை வகிக்கிறது. வேலையற்ற இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புகள் கிடைக்கும் விதத்தில் தமிழகத்தின்பல் வேறு பகுதிகளில் தொழில்களை அமைக்க தொழில் முனைவர்களுக்கு தமிழக அரசு ஊக்கம் அளிக்கிறது.

தமிழகமுதல்வரின் சீரிய தலைமையில் தமிழ் நாடு தொழில் அபிவிருத்தியடைந்துள்ளது" என்று குறிப்பிட்டார்.

வி. வி. எஸ். எஸ். மணி நன்றி கூறினர்.



## கழக செய்திகள்

### கோடம்பாக்கம்

சென்னை 114 வது வட்டம் புலியூர்புரத்தில் கழகம், மதுரை மாநகராட்சி தேர்தலில்வெற்றிபெற்றதை யொட்டி வட்ட அமைப்பாளர் பி. ஏ. கணபதி தலைமையில் மன்றதோழர்கள் து. மகிழ்பரன், ந. கோபால், மணி, கோபிநாத், ஜி.கணேசன், சந்திரபாபு, சிவானந்தம், அப்பாவு ஆகியோர் வீடுவீடாகச்சென்று மக்களுக்கு இனிப்புகளை வழங்கினர்.

### குடியேற்றம்

2-8-78 மாலை 6மணிக்கு குளக்கரைத் திடலில் ஏ. வி. துரைசாமி தலைமையில் பேசுவோர்: அமைச்சர் எஸ். டி. எஸ்., ஏ.கே. அரங்கநாதன் எம்.எல்.ஏ., இரா. ச. மாரன், மு. க. மெய்ஞானம், முருகன் மற்றும் பலர்.

## குடிபோதையில் இருந்த போலீசை பிடித்துகொடுத்த கழக எம்.எல்.ஏ.

செங்கல்பட்டு, ஜூலை 30-குடிபோதையில்இருந்த ஒரு போலீஸ்காரரை கழக எம். எல். ஏ. எம். சண்முகம் பிடித்துக் கொடுத்தார்.

செங்கல்பட்டு மாவட்டம் கண்ணம்மா சத்திரத்தைச் சேர்ந்தவர் போலீஸ்காரர் வீராசாமி. இவர்குடிபோதையில் இருந்தபோது மாவட்ட பெரிய போலீஸ் அதிகாரியிடம் இது பற்றி கழக எம்.எல்.ஏ. சண்முகம் தகவல் கொடுத்தார்.

போலீஸ்காரர் வீராசாமி தற்காலிக வேலை நீக்கம் (சஸ்பெண்டு) செய்யப்பட்டார். விசாரணை நடந்து வருகிறது.

## கருணை நெல், அஞ்சுகம் பாசிப்பயறு ஆகியவற்றின் பெயர் மாற்றம்

சென்னை, ஜூலை 30- "ஆராய்ச்சியின் மூலம் கண்டுபிடிக்கப்படும் புதிய ரகங்களுக்கு அரசியல் தலைவர்களின் பெயர்களையும், தனிப்பட்டவர்களின் பெயர்களையும் சூட்டுவதில்லை என்று அரசு மேற்கொண்ட முடிவுக்கு ஏற்ப, "கருணை" என்ற நெல்லுக்கு "கோ.33" என்றும், "அஞ்சுகம்" என்ற பாசிப்பயறுக்கு 'வைகாசி பச்சைப்பயறு' என்றும் பெயர் மாற்றப்பட்டுள்ளது" என்று தமிழக வேளாண்மை- நீர்ப் பாசனத்துறை அமைச்சர் ப. குழந்தைவேலு அறிவித்துள்ளார்.

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி
"அண்ணா"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-14.


# அண்ணா



## எட்மண்ட் அறிவிப்பு..

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

யுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்னும் மீனவர்களை முன்னேற்றுவதற்கான பல ஏற்பாடுகளை செய்து கொண்டிருக்கிறோம். எல்லோருக்கும் விசைப்படகுகள் கொடுக்க முடியாவிட்டாலும் மண்ணெண்ணையால் இயங்கும் அவுட்ஸ்டேண்ட் (வெளிப்புற) என்ஜின் பொருத்தப்பட்ட பைபர்கிளாஸ் படகுகளை வழங்குவதுபற்றி முயற்சித்து வருகிறோம்.

4 அல்லது 5 மாதங்களுக்கு முன்பு ஜப்பான் சென்றிருந்தபோது அங்கு படகுகள் தயாரிக்கும் தொழிற்சாலையை சென்று பார்வையிட்டு வந்திருக்கிறேன்.

முதல் தடவையாக 200 படகுகள் வாங்க மத்திய அரசிடம் அனுமதி கேட்டு இருக்கிறோம். அதற்கான திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது.

அதில் 4 பேர் செல்லலாம், ஒரு டிரைவர் இருக்கலாம். நீண்ட தூரம் கடலுக்குள் சென்று மீன் பிடிக்கலாம்.

4 மீனவர்கள் ஒன்று சேர்ந்து அதனை வாங்கி பயன்படுத்திக்கொள்ளலாம்.

இரண்டு மாதத்திற்கு முன்பு இங்கிலாந்திலிருந்து வந்த குழுவுடன் புரட்சித் தலைவரும் நானும் பேசினோம்.

தமிழ்நாட்டில் தான் கடல்வளம் நிரம்பியிருக்கிறது. வங்காள குடாக்கடல், இந்துமகாசமுத்திரம், அரபிக்கடல் ஆகிய மூன்று கடல்கள் இருக்கின்றன. 200மைல் வரை கடல் நமக்கு சொந்தம்.

### மீன்வள ஆராய்ச்சி

ஆனாலும் குறிப்பிட்ட இடங்களில் தான் மீன் பிடித்துக் கொண்டிருக்கிறோம் நாம் போகாத இடம் ஏராளமாக இருக்கிறது.

ஆகவே, மீன் வளம் குறித்து கடலில் ஆராய்ச்சி செய்வது பற்றி அந்தக்குழுவுடன் பேசினோம்.

சமீபத்தில், மத்திய விவசாய அமைச்சர் பர்னாலாவிற்கு நமது அரசு கடிதம் எழுதி யிருக்கிறது. வங்காளக்குடாக்கடலில், மீன்கள் இருக்குமிடம், என்னென்ன மீன்கள், எவ்வளவு இருக்கின்றன என்பதை ஆராய்ச்சி செய்து புதிய மீன்பிடி இடங்களைக் கண்டு பிடிக்க வேண்டும் என்பதை இந்தஅரசு எடுத்துச் சொல்லியிருக்கிறது.

ஏழை மீனவர்களின் வாழ்வை வளமாக்க, தமிழக அரசும் புரட்சித்தலைவரும் மேலும் நல்ல பல திட்டங்களை தீட்டி செயல்படுத்த உறுதியோடு இருக்கிறார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு தமிழகஉணவு மீன்துறை அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட் பேசினார்.

விழாவுக்கு பேராவூரணி தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் எம். ஆர். கோவேந்தன் தலைமைவகித்தார். வீ. வெங்கடாசலம் வரவேற்றுப் பேசினார்.

தி. மா. குமாரசாமி, கு. கருப்பையன், ராமசாமி, மு. சீனிவாசன், ஆ.கோ. சின்னசாமி, இக்பால், பாலையன், தாசன் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டனர்.

## சிறந்த நடிகர்-நடிகை தேர்வு: கமலஹாசன் லட்சுமிக்கு இருபரிசுகள்

சென்னை, ஜுலை 30-சிறந்த நடிகராக கமலஹாசனும், சிறந்த நடிகையாக லட்சுமியும் தமிழ், மலையாளம் இருமொழிகளிலும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

இன்று காலையில் 'ஈகா' திரையரங்கில் நடந்த விழாவில் திரைப்பட ரசிகர் சங்கத்தினர் சிறந்தகலைஞர்கள் தேர்வை அறிவித்தனர்.

கமலஹாசனும் லட்சுமியும் இரு மொழிப்படங்களிலும் சிறந்த கலைஞர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இரு பரிசுகள் பெறுகின்றனர்.

சென்னையில் உள்ள பிலிம் பேன்ஸ் அசோசியேஷன் கடந்த 26 ஆண்டுகளாக சிறந்த திரைப்படங்களுக்கும், கலைஞர்களுக்கும் பரிசு வழங்கி வருகின்றது.

கடந்த 1977 ஆம் ஆண்டில் சிறந்த திரைப்படங்களையும், சிறந்த கலைஞர்களையும் தேர்வு செய்து அறிவித்துள்ளது.

இந்த சங்கத்திற்கு உயர் நீதிமன்ற நீதிபதி எஸ். மோகன் தலைவராக உள்ளார்.

சிறந்த படமாக 'பதினாறு வயதினிலே' தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. 'புவனா ஒரு கேள்விக்குறி', 'சில நேரங்களில்சிலமனிதர்கள்' ஆகிய படங்கள் சிறப்புப் பரிசு பெறுகின்றன.

சிறந்த நடிகராக கமலஹாசனும், சிறந்த நடிகையாக லட்சுமியும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

சிறந்த கதாசிரியர் பஞ்சு அருணாசலம்(அவர்எனக்கே சொந்தம்)சிறந்தடைரக்டர் எஸ். பி. முத்துராமன் (புவனா ஒரு கேள்விக்குறி) சிறப்புப்பரிசு: டைரக்டர் பாரதிராஜா (பதினாறு வயதினிலே) சிறந்த இசை அமைப்பாளர்: எம்.எஸ் விஸ்வநாதன் (அண்ணன் ஒரு கோவில்)

### புலமைப்பித்தன்

சிறந்த பாடல் ஆசிரியர் புலவர் புலமைப்பித்தன் (தீபம்) சிறந்த ஒளிப்பதிவாளர்: பாபு, சிறப்புப் பரிசு பெறுபவர்: ஸ்ரீதேவி (காயத்ரி), துணை நடிகர்: தேங்காய் சீனிவாசன், துணை நடிகை: படாபட் ஜெயலட்சுமி, நகைச்சுவை நடிகர்: சுருளி ராஜன், நகைச்சுவைநடிகை: மனோரமா, புதுமுகம்: டெல்லி கணேசன், பாடகர்: எஸ். பி. பாலசுப்பிரமணியம், பாடகி: எஸ். ஜானகி, வில்லன் நடிகர்: ரஜனிகாந்த், குழந்தை நட்சத்திரம் பேபி வரலட்சுமி ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

### சிவாஜிகணேசன்

தொடர்ந்துசிறந்த நடிகராகத் திகழும் சிவாஜி கணேசன், நடிகை கே. ஆர். விஜயா, தெலுங்கு நடிகர் ஏ.நாகேஸ்வரராவ் நடிகை வாணிஸ்ரீ, நகைச்சுவை நடிகர் ராஜ்பாபு ஆகியோருக்கு சிறப்புப் பரிசு வழங்கப்படும்.

சிறந்த தமிழ்ப் படத் தயாரிப்பாளராக சுப்பு புரொடக்ஷன்சும், தெலுங்கு தயாரிப்பாளராக ராமாநாயுடும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

### ராஜ்குமார்

தெலுங்கில் சிறந்த நடிகராக முரளி மோகனும் நடிகையாக ஜெயசுதாவும் கன்னடத்தில் சிறந்த நடிகராக ராஜ்குமாரும், நடிகையாக ஜெயந்தியும், மலையாளத்தில் சிறந்த நடிகராக கமலஹாசனும் (ஓர் மகள் மரிக்குமோ)நடிகையாகலட்சுமியும் (அக்னி நட்சத்திரம்) சிறந்த டைரக்டராக கே. எஸ். சேதுமாதவனும் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

சிறந்த திரையரங்காக ஈகாவும், சிறப்புப் பரிசு பெறுபவையாக சத்யா அரங்கு திரையரங்குகளும் தேர்வு பெற்றுள்ளன.

சிறந்த இந்திப்பட நடிகராக அமிதாபச்சனும், நடிகையாக ஹேமமாலினியும் டைரக்டராக ஷியாம் பெனகலும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

### பரிசளிப்பு விழா

சிறந்த கலைஞர்களுக்கு சென்னை திரைப்பட ரசிகர்கள் சங்கத்தினர் பரிசு வழங்கும் விழா வருகிற செப்டம்பர் மாதம் 10ஆம்தேதி மாலை 4மணிக்கு பல்கலைக்கழக நூற்றாண்டுவிழா மண்டபத்தில் நடக்கிறது.

## ஆர். எம். வீ. பேச்சு

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

கலைத்துறை திருவிழாவாக எண்ணி கலைத்துறையினர் அனைவரும் பங்கேற்கவேண்டும். அன்றைக்குகலைத்துறை சம்பந்தப்பட்ட அனைவரும் அரை நாளாவதுவிடுமுறை நாளாக அறிவித்து அந்த விழாவில் பெருந்திரளாகப் பங்கேற்க வேண்டும்.

பன்னிரண்டு வயதில் இருந்தே கலைத்துறைக்கு வந்து படிப்படியாக உயர்ந்து தயாரிப்பாளராகவும் ஆனேன். இன்றைக்கு இந்த விழாவில் அமைச்சர் என்பதை விட கலைத்துறைப் பிரதிநிதி என்ற முறையில் கலந்து கொள்வதையே பெருமையாகக் கருதுகிறேன். இதனால் அமைச்சர் பதவியை சிறுமை என்று யாரும் கருதிடக்கூடாது.

ஆனால் அதே நேரத்தில் கலைத்துறையை ஏணியாக பயன்படுத்திப் புகழ்பெற்று ஆட்சிக்கு வந்த ஒரு சிலர் ஏறிய ஏணியை எட்டி உதைப்பது போல பதவியை வைத்தே கலைத்துறையின் கழுத்தை நெரித்தவரலாற்றுநிகழ்ச்சிகளையும் யாரும் மறந்து விடமுடியாது.

இதுவரைசினிமாத்துறை அங்கீகரிக்கப்படாமலிருந்ததற்குக் காரணமே நீங்கள் அனைவரும் உங்கள் வலுவுக்கேற்ற முதுகெலும்பை வைத்திருக்காமல்போனதுதான், உங்கள் வலுவை நீங்களே உணரத் தவறி விட்டீர்கள்.

இப்போதுதான் முதன் முதலில் திரையுலகத்தை அங்கீகரிக்கிற அரசுகள் நான்கு தென் மாநிலங்களிலும் அமைந்துள்ளன. மத்திய அரசிலும் திரைப்படத்துறையினர் சொல்கிறவை நியாயமானவை தான் என்று உணர்ந்து அவற்றை அங்கீகரிக்கிறவராக அமைச்சர் அத்வானி இருக்கிறார். எனவே இந்த நல்ல நேரத்தை கலையுலகத்தினர் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

சிறந்த படமா-பம்பாய். அதை விட்டால் கல்கத்தா என்ற உணர்வையும் இந்தியப்படம் என்றால்அது இந்திப்படம் தான் என்ற உணர்வையும் மாற்றியாக வேண்டும். டெல்லிக்கும் நமக்கும் நீண்டதூரம் என்று நம்மைநாமேதாழ்வு படுத்திக்கொள்ளும் மனப்போக்கை விட்டுவிடவேண்டும். டெல்லியுடன் நேரடி தொடர்பு கொள்வதற்கான வாய்ப்பை தென்னக தயாரிப்பாளர்கள்உருவாக்க வேண்டும். அதற்காக ஒரு அமைப்பை டெல்லியில் ஏற்படுத்தவேண்டும்.

அதே நேரத்தில்மத்திய அரசுக்கு தயாரிப்பாளர்கள் சார்பில் தெரிவிக்க வேண்டிய பிரச்சினைகளை தமிழக அரசு நிச்சயம் எடுத்துச் சொல்லும்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

### கில்டு நிர்வாகிகள்

இந்தக்கூட்டத்தில்தென்னிந்திய திரைப்பட தயாரிப்பாளர் சங்க நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

அவர்கள் விவரம் வருமாறு: தலைவர் பி.புல்லையா. துணைத் தலைவர்கள் ஜி. அனுமந்தராவ், ஆர். எஸ். சீனிவாசன், செயலாளர்கள் கே. வெங்கட்ராமன், கே.வி. திலக், பொருளாளர் என். நாகசுப்பிரமணியம் பொதுக்குழு உறுப்பினர்கள் ஏ. வி. எம் சரவணன், எம். பாலையா உள்பட 10 பேர்.

ஏ. வி. எம். சரவணன் பேசும்போது "முதல்வர் புரட்சித்தலைவரின் ஆட்சி திரையுலகின் பொற்காலமாகத் திகழ்கிறது. பணப் புழக்கம், அதிகமான அளவு படங்கள் தயாரிப்பு, அதிகமான அளவில் வெற்றிப் படங்கள் ஆகியவை கடந்த ஆண்டில்தான் நிகழ்ந்துள்ளது. இதை அவரது ஜன்ம விரோதிகள் கூட மறுக்க மாட்டார்கள்" என்றுகுறிப்பிட்டார்.

அமைச்சர் ஆர்.எம்.வீ. விடுத்த வேண்டுகோளின்படி சிறந்த படங்களுக்கு அரசு பரிசளிக்கும் விழாவன்று ஸ்டுடியோக்களுக்கு ஒருநாள் விடுமுறையளிக்க தீர்மானிக்கப்படும்" என்றும் சரவணன் குறிப்பிட்டார்,

### ஆந்திர அமைச்சர்

ஆந்திரமாநில சுகாதார அமைச்சர் மதன்மோகனும் விழாவில் பேசினார் கலையுலகத்துக்கு கழக அரசு ஆற்றியுள்ள பணிகளை அவர் புகழ்ந்துரைத்தார்.

பி. புல்லையா தலைமை தாங்கினார். கே. வெங்கட்ராமன் கோரிக்கை மனுவை வாசித்து, அமைச்சர் ஆர். எம். வீ.யிடம் கொடுத்தார்.

சீனிவாசன் நன்றி கூறினார்.

## தமிழ்நாடு அரசு போக்குவரத்துக் கழகங்களின் அண்ணா போக்குவரத்து மேற்பார்வையாளர் சங்கம்

தமிழ்நாடு அரசு போக்குவரத்துக் கழகங்களின் அண்ணா போக்குவரத்து மேற்பார்வையாளர்கள் சங்க பொது உறுப்பினர்கள் கூட்டம் 31-7-78 திங்கள் இரவு 8-30 மணியளவில் கழக தலைமை நிலையத்தில் (புதிய எண் 275 ஔவை சண்முகம்சாலை ராயப்பேட்டை சென்னை-14) அண்ணா தொழிற்சங்கப்பேரவை பொதுச் செயலாளர் வை.பெருமாள் தலைமையிலும் பேரவைப் பொருளாளர் கே. இராசேந்திரன், போக்குவரத்து சங்க கூட்டமைப்பு செயலாளர் கோ. ப. அமிர்தலிங்கம் முன்னிலையிலும் நடைபெறும்.

சங்க உறுப்பினர்கள் அனைவரும் தவறாது கலந்து கொள்ளுமாறு சங்க பொதுச்செயலாளர் நா. சங்கரன் கேட்டுக்கொள்கிறார்.